REGD. No: TN MS (C) 244 | ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) | Phone 812818 | 4 பக்கம் விலை 35 காசு



**நம்பிக்கை**

நம்பிக்கை என்பது சிறு புயற்காற்றிலும் துவண்டு விழும் மெல்லிய மலரல்ல. அடிபெயரா இமயத்தைப் போன்றது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**நினைப்பு**

நிலை உயர்ந்திருந்தால் நினைப்பு உயர்ந்திருக்கும் நிலை தாழ்ந்திருந்தால் நினைப்பு தாழ்ந்திருக்கும் நிலைக்குத் தகுந்தாற் போல் தான் நினைப்பும் இருக்கும்.

-அண்ணல் காந்தி



மலர் 4 | சென்னை 7-5-1980 புதன் | (★) ❋ ● ❋ (✱) | வெளியூர் 8-5-1980 வியாழன் | இதழ் 178

## 'டிக்கெட் தராதது சரிதான்'

## மூப்பனார் கோஷ்டியினர்மீது

# எம். பி. எஸ். பாய்ச்சல்

## 'உண்மையான கட்சிக்காரர்கள் அல்ல' என்று மறைமுகத் தாக்கு



சென்னை, மே 7 மூப்பனார் கோஷ்டியைச் சேர்ந்த பல முன்னாள் எம். எல். ஏ க்களுக்கு இத்தேர்தலில் டிக்கெட் தராதது சரிதான் என்று தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் தலைவர் எம். பி. சுப்பிரமணியம் கூறினார். கட்சியிடம உண்மையான பற்று இல்லாதவர்கள் என்றும் அவர்களை மறைமுகமாகத் தாக்கினார்.

நடக்க இருக்கும் தமிழக சட்டமன்றத் தேர்தலில் மூப்பனார் கோஷ்டியைச் சேர்ந்த பலருக்கு தேர்தல் டிக்கெட் தராதது தெரிந்ததே. இதன் காரணமாக தமிழக இந்திரா காங்கிரசில் பெரும்பூசல் இருந்து வருகிறது.

எம். பி. சுப்பிரமணியம் டெல்லியிலிருந்த போதே மூப்பனாரும் டெல்லிக்குப் போய்தனது ஆதரவாளர்களுக்கு தேர்தல் டிக்கெட் பெறுவதில் தீவிரம் காட்டினார்.

ஆனால் அவரது ஆதரவாளர்கள் பெருமளவில் புறக்கணிக்கப் பட்டுள்ளனர் அதிலும் குறிப்பாக மூப்பனாரின் தீவிர ஆதரவாளர்களான முன்னாள் எம் எல் ஏ க்கள் 9 பேருக்கு தேர்தல்டிக்கெட் தரப்படவில்லை.

இதுபற்றி கருத்துக் கூறிய எம். பி. சுப்பிரமணியம், அந்த 9 முன்னாள் எம். எல். ஏக்களுக்கு தேர்தல் டிக்கெட் தராதது நியாயம் தான், முறையானதுதான் என்று கூறினார்.

அத்தோடு நில்லாமல் கட்சியிடம் உண்மையாக இருந்தவர்களுக்கும் கட்சி உறுப்பினர்களாக இருந்து தொண்டாற்றியவர்களுக்குமே கட்சி டிக்கெட் வழங்குவதில் முன்னுரிமை கொடுக்கப்பட்டிருப்பதாகவும் எம். பி. சுப்பிரமணியம் கூறினார்.

### மறைமுக தாக்குதல்

இப்படிக் கூறியதன் மூலம், டிக்கெட் கொடுக்கப்படாத மூப்பனாரின் ஆதரவாளர்கள் கட்சியிடம் உண்மையாக இல்லாதவர்கள் என்று மறைமுகமாகக் கோடிட்டுக் காட்டியிருக்கிறார் சுப்பிரமணியம்.

எம். பி. சுப்பிரமணியம் இப்படிக் கூறியிருப்பது மூப்பனார் கோஷ்டியில் பெரும் சலசலப்பை ஏற்படுத்தியிருக்கிறது.

### ஏற்கனவே குழப்பம்

ஏற்கனவே தேர்தல் டிக்கெட் தகராறில் தமிழ்நாடு இந்திரா காங்கிரசில் பல்வேறு விரும்பத்தகாத நிலைகள் இருந்து வருகின்றன

போர்க் கொடி தூக்கிய இளைஞர் காங்கிரசாரையும், சிவாஜி மன்றத்தினரையும் கட்சித் தலைமை தற்காலிகமாகத் திருப்திப் படுத்தியிருக்கிறது. இதற்கிடையில் கட்சி முக்கியஸ்தர்களிடையேயும் பல்வேறு கருத்து வேறுபாடுகள் தோன்றியிருக்கின்றன.

இந்திரா காங்கிரசில் தாங்கள் பெரிதும் புறக்கணிக்கப் பட்டிருப்பதாக அக்கட்சியின் அரிசனப்பிரிவு கருதி, அதைத்தொடர்ந்து அந்தஅமைப்பே கலைக்கப் பட்டிருக்கிறது.

தங்களுக்குத் தேர்தல் டிக்கெட் தராததைத் தொடர்ந்து பல்வேறு மாவட்ட இந்திரா காங்கிரஸ் பொறுப்பாளர்கள் பெரிதும் அதிருப்தியடைந்திருக்கின்றனர் இதன் காரணமாகவே, இந்திரா காங்கிரசின் அதிகாரபூர்வ வேட்பாளர்களை எதிர்த்து அதே கட்சியைச் சேர்ந்த 23 பேர் போட்டியிடுகிறார்கள்.

### இந்திரா காங்கிரசார் சோர்வு

சென்னை, செங்கற்பட்டு மாவட்டங்களின் இந்திரா காங்கிரஸ் நிர்வாகிகள் அடியோடு இந்தத் தேர்தலில் புறக்கணிக்கப் பட்டிருப்பதைத் தொடர்ந்து இந்த மாவட்டங்களில் இந்திரா காங்கிரசார் சோர்ந்து போயிருக்கிறார்கள், இந்தச் சூழ்நிலையில் மூப்பனார் கோஷ்டினர் மீது எம். பி. சுப்பிரமணியம் தாக்குதல் தொடுத்திருப்பது இந்தத் தேர்தலில் இந்திரா காங்கிரசுக்குப் பெரும் பாதகத்தை ஏற்படுத்தும் என்று கருதப்படுகிறது.

## சென்னை நகரில் இன்ஜினியர் 1200 பேர் வேலைநிறுத்தம்

சென்னை, மே 7- சென்னையில் 1200 இன்ஜினியர்கள் இன்று ஒரு நாள் வேலை நிறுத்தம் செய்தனர்.

தமிழகம் முழுதும் இன்ஜினியர்கள் போராட்டம் நடத்திவருகின்றனர்.

சென்னையில் 7 அம்சக் கோரிக்கைகளைமுன்வைத்து 1200 இன்ஜினியர்கள் இன்று ஒருநாள் அடையாள வேலை நிறுத்தம் செய்தனர்.

இந்த வேலை நிறுத்தத்தில் மின்சார வாரிய, குடிநீர் வழங்கும் வாரிய இன்ஜினியர்கள் கலந்து கொள்ளவில்லை.

மயிலாப்பூரில் உள்ள பாலு கார்மெண்ட்ஸ் நிறுவன ஊழியர்கள் மைதிலிசிவராமன் தலைமையில்100பேர்கோட்டைக்கு ஊர்வலமாகச் சென்றனர். கடந்த 45 நாட்களாக இந்த நிறுவனம் மூடப்பட்டு இருப்பதையும் தங்கள் பிரச்சினைகளைத் தீர்க்கக் கோரியும் தமிழக ஆளுநரின் ஆலோசகரிடம் அவர்கள் மனு கொடுக்கிறார்கள்.

அம்மை ஊசி போடுவோர் சங்கத்தை சேர்ந்த பத்து பெண்கள் உள்பட நூறு பேர் சென்னை, தேனாம்பேட்டை டி. எம். எஸ். அலுவலகம் முன்பு தர்ணா போராட்டம் நடத்தினர்.

அம்மை ஊசி போடுவோர் ஊழியர் அங்கத்தினர் 3 கோரிக்கைகளை முன்வைத்து சந்திரசேகர் தலைமையில் இவ்வாறு போராட்டம் நடத்தினர்.

## சென்னையில் வேட்பாளர் அறிமுககூட்டம்: ஜோதிபாசு பங்கேற்பு

சென்னை, மே 7- வருகிற 10ந்தேதி மாலை பெரம்பூர் ரயில்நிலையம் அருகில் நடைபெறும் பிரும்மாண்டமான பொதுக்கூட்டத்தில் மார்க்சிஸ்ட் வேட்பாளர்கள் அறிமுகம் செய்து வைக்கப்படுவார்கள். இதில் மேற்கு வங்க முதல்வர் ஜோதிபாசு கலந்து கொள்கிறார். பி. ஆர். பரமேஸ்வரன் தலைமை வகிக்கிறார். கே. ஏ. கே, எம். கல்யாணசுந்தரம், குமரி அனந்தன், அனந்தநாயகி ஆகியோரும் கலந்து கொண்டு பேசுகிறார்கள்.

## இடைப்பாடி கழக வேட்பாளர் ஐ. கணேசன்

இடைப்பாடி தொகுதியில் அதிகார பூர்வமான கழக வேட்பாளர் ஐ. கணேசன்.

தாரமங்கலம் தொகுதி இந்திய கம்யூனிஸ்ட் கட்சிக்கு விட்டுக் கொடுக்கப்பட்டுள்ளது. அங்கே கழகம் போட்டியிடவில்லை. கம்யூனிஸ்ட் வேட்பாளர் வெற்றிக்கு கழகத் தோழர்கள் பாடுபடுகிறார்கள்.

அசோக்நகரில்

## கழகத் தோழருக்கு கத்திக்குத்து

சென்னை, மே 7- அசோக்நகரைச் சேர்ந்தவர் செல்வமணி (வயது 28). இவர் இப்பகுதி அண்ணா மதிவனர்ச்சிமன்ற துணை செயலாளர்-ஆவார். சம்பவத்தன்று இவர் தன் வீட்டில் படுத்து தூங்கிக் கொண்டிருக்கும் போது உதயசூரியன், சக்கரபாணி மணி மற்றும் 10பேர் அவர் வீட்டில் புகுந்து அவரை சைகிள் செயின் மற்றும் கட்டையால் தாக்கினார்கள். ஒருவர் கத்தியால் செல்வமணியை நான்குஇடங்களில்குத்தினாராம். படுகாயம் அடைந்த அவர் உயிருக்கு ஆபத்தான நிலையில் ராயப்பேட்டை மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார். இவரைத் தாக்கியவர்கள் தி. மு. க,வினர் என்று தெரிகிறது. இது சம்பந்தமாக அசோக் நகர் போலீசார் வழக்கு பதிவு செய்து விசாரணை செய்து வருகின்றனர்.

## ஓட்டு வேட்டை: மாணவர்களுக்கு ஜனார்த்தனம் வேண்டுகோள்

சென்னை, மே 7-கழக அரசின் சாதனைகளைச் சொல்லி வீடுவீடாகச் சென்று வாக்குச் சேகரிக்குமாறு மாணவர்களை ஜனார்த்தனம் எம். எல். சி, கேட்டுக் கொண்டார்.

டாக்டர் ஜனார்த்தனம் எம் எல் சி விடுத்துள்ள அறிக்கை வருமாறு:

சட்டமன்றத் தேர்தலில் மாணவர் அமைப்பினைச் சார்ந்தோர் தீவிரமாக தேர்தல் பணியில் ஈடுபட வேண்டுகிறேன். இது கல்விக்கூடங்களின் விடுமுறைக்காலம் என்பதால் அவரவர் தொகுதிகளில் பணியாற்றிடவசதிஏற்பட்டுள்ளது.

மாணவத் தோழர்கள், சிறுகுழுவாக வாக்காளர் இல்லம் சென்று, புரட்சித்தலைவரின் அரசு இரண்டரை ஆண்டுகளில் ஆற்றிய சாதனைகளையும், வரும் தேர்தலில் ஜனநாயகம் காக்கச் செயல்பட வேண்டிய அவசியத்தையும் வலியுறுத்தி நமது அணியினருக்கு வாக்குச் சேகரிக்கும் பணியில் அயராது உழைத்திட வேண்டுகிறேன்.

### புரட்சித்தலைவர் புகழ் பாடி

மாணவர் அணியினைச் சார்ந்த பலர் வேட்பாளராக நிற்க வாய்ப்புப் பெற்றுள்ள இத்தேர்தல் களம், புரட்சித்தலைவரின் புகழ்முழங்கும் வெற்றிக்களம் ஆகும். அண்ணாவின் அரசுமீண்டும் தமிழகத்தில் அமைய அனைவரும் உழைப்போம்.



இவ்வாறு ஜனார்த்தனம் தமது அறிக்கையில் கூறியுள்ளார்.

## சென்னை வானொலியில் ஆர். எம். வீ. பேசுகிறார்



அனைத்திந்திய அண்ணா தி மு கழகத்தின் சார்பில் 8-5-80 மாலை 7-45 மணிக்கு சென்னை வானொலியில் **ஆர். எம். வீ.** பேசுகிறார்.

சென்னை, திருச்சி, கோவை, நெல்லை வானொலி நிலையங்கள் இதனை ஒலிபரப்பும்

## மாறனை அவமதிக்கும் கருணாநிதி!

நமது (தி. மு. க.) நாடாளுமன்ற உறுப்பினர்களில் ஒரு சிலர் இவரிடம் (வை. கோபாலசாமியிடம்) கற்றுக்கொள்ள வேண்டிய பாடம் இது என்றுகூட நான் பெருமூச்சு விட்டவாறு கூறிடுவேன்.

-முரசொலியில் கருணாநிதி

மருமகன் மாறனுக்கும், மாமா கருணாநிதிக்கும் கடந்த சில நாட்களாக மனத்தாங்கல் இருந்து வருவது தெரிந்த கதை தான்.

மனோகரனுக்கு தி. மு. க. வில் முக்கியத்துவம் தரப்படுவதை எதிர்த்து மாறன் போர்க்கொடி தூக்கியதிலிருந்து இந்த மோதல் இன்னும் தீரவில்லை.

அந்த மாறனை அவமானப் படுத்துவதற்காகவே முரசொலியில் கருணாநிதி மேற்கண்டவாறு எழுதியிருக்கிறாரோ என்னவோ?

நாடாளுமன்ற தி. மு. க. தலைவராக இருப்பவர் மாறன்.

மாநிலங்களவையின் உறுப்பினராக இருப்பவர் கோபாலசாமி.

இருக்கிற தி. மு. க. எம். பி. க்களிலேயே சின்ன வயதுக்காரர் இந்தக் கோபாலசாமி தான்.

இவரிடம் பாடம் படிக்கவேண்டும் என்று மாறனுக்கு மறைமுகமாகக் கருணாநிதி கூறுவது மாறனை அவமானப் படுத்துவதாகாதா?

மாநில சுயாட்சி பற்றி தலையணை கனத்துக்கு புத்தகம் எழுதிய மாறனுக்கா இந்தக்கதி?



# நிலையான அரசை அமைப்போம் என்றவர்கள் நிலையான கழக அரசைக் கலைத்ததை நினைப்பீர்

தா. பாண்டியன் கடும் தாக்கு

# அண்ணா தி. மு. க. வை வீழ்த்த டெல்லிக்கு ஓடி ஆள் பிடிக்கும் கருணாநிதி

சென்னை, மே 7- அண்ணா தி மு க வை வீழ்த்த தன்னால் முடியாது என்ற நிலையில் டெல்லிக்கு ஓடி ஆள் பிடிக்கிறார் கருணாநிதி என்று கம்யூனிஸ்ட் தலைவர் தா. பாண்டியன் கூறினார்.

சென்னை ஏழுகிணறு பூங்கா அருகில் நடைபெற்ற கழகப் பொதுக் கூட்டத்திற்கு எம். ஏ காதர் தலைமைவகித்தார்.

இரட்டை இலை சின்னத்தில் போட்டியிடும் வேட்பாளர் டாக்டர் அபிபுல்லா பேக் அவர்களை ஆதரித்து நடந்த இக்கூட்டத்தில் பி ராமமூர்த்தி, தா. பாண்டியன், செய்குத் தம்பி, புலவர் இந்திரகுமாரி, வேட்பாளர் அபிபுல்லா பேக், சி. வி. அன்புத்தம்பி, ஏ. லோகநாதன், ஏ. வி. கிருஷ்ணமூர்த்தி, மண்ணடி கிருஷ்ணமூர்த்தி, தாமோதரன், கே. எல்லப்பன், கஜேந்திரபாபு, எம். வி. ராமன், ஏ. கே. பீர்முகமது, ஆறுமுகம், கண்ணன் ஆகியோர் பேசினர்.

இந்தியகம்யூனிஸ்டுகட்சி தலைவர் தா. பாண்டியன் பேசும்போது கூறியதாவது:

தி. மு. க- இந்திரா காங்கிரஸ் கட்சிகளின் கொள்கையோ, லட்சியமோ ஒன்றுபட்டதல்ல. அப்படிப்பட்டவர்கள் இப்போது லட்சிய உறவு கொண்டிருக்கிறார்கள்.

அவர்கள் கட்சிகளின் தொகுதி பங்கீடு நடைபெற்றுக் கொண்டிருந்த போது திடீர் என முரண்பாடு வந்தது. 2 நாட்கள் பேசவில்லை.

## அதற்குள் சண்டை

காரணம் கேட்ட போது யார் முதலமைச்சர் என்ற முடிவு தெரிந்த பிறகு தான் பேச்சு வார்த்தை என்று சொன்னார்கள்.

தி. மு. க. வுக்கே முதலமைச்சர் பதவி என்று இந்திரா சொன்ன பிறகு ஆளுக்கு 110 இடங்கள் என்று பிரித்துக் கொண்டிருக்கிறார்கள்.

இந்திரா அப்போதுகூட நமது கூட்டணி பெரும்பான்மை பெற்றால்... என்றுதான் சொல்லியிருக்கிறார்.

பெரும்பான்மை பெற்றால்... வராத ஒன்றுக்கு ஏன் சண்டை அடித்துக் கொள்ளவேண்டும். நீயே இரு என்று இந்திரா சொல்லியிருக்கிறார்.

அப்படியே வெற்றிபெறுகிறார்கள் என்று வாதத்திற்காக எடுத்துக் கொள்வோம்.

தி மு க 70ம். இந்திரா காங்கிரஸ் 60ம் பெறுகிறது என்று வாதத்திற்காக வைத்துக்கொள்வோம்.

இரு கட்சிகள் போக மீதமுள்ள 104 இடங்களிலும் மற்ற கட்சிகள் வெற்றி பெறுகிறது.

திடீரென இந்திரா காங்கிரஸ் அந்த 104 இடங்களில் வெற்றி பெற்றவர்களுக்கு நாங்கள் ஆதரவு கொடுப்போம் என்று சொன்னால் கருணாநிதி என்ன செய்வார்?

உடனே அன்பழகன் சொல்வார் 'அன்றே சொன்னேன்' கருணாநிதி தான் கேட்கவில்லை' என்று.

கருணாநிதி சொல்லுவார் சேர்ந்ததால் தான் அன்பழகனே இருக்க முடிகிறது என்று திமுக இந்திரா காங்கிரசார் வெற்றி பெற முடியாமல் தோல்வியை தழுவப் போகிறார்கள்.

## நாளை நடப்பது

முதல் நாள் பத்திரிகைகளில் அறிக்கை வரும். 'கருணாநிதிக்கு எம். பி. எஸ் கண்டனம்' என்று 'உன்னை முதலமைச்சராக அறிவித்ததால்தான் மக்கள் ஓட்டுப் போடவில்லை' என்பார் எம். பி. எஸ்.

கருணாநிதி சொல்லுவார் இப்படிச் சொல்வீர்கள் என்று தெரிந்திருந்தால் எல்லா இடங்களிலும் நாங்களே போட்டியிட்டிருப்போம் என்று.

இதை ரசிக்க நாம்வேறு ஏதாவது நடத்துவோம். இதற்காக தேர்தலை நடத்த வேண்டாம். வர இருக்கும் தேர்தலில் நல்லவர்களுக்கு வாக்களியுங்கள்.

இங்கே இருப்பதை இழக்க வேண்டாம் நாம் சொர்க்கத்தை எதிர் பார்க்கவில்லை ஆனால் நரகத்தை தடுப்போம்.

கூட்டுசேருவதற்கு இடம் பங்கீடு செய்வதற்கு முதலமைச்சர் பதவியை கேட்ட கருணாநிதி என்ன கேட்டிருக்கவேண்டும்?

ஆண்டு தோறும் மின்வெட்டு வந்து தமிழகத்தின் தொழில்களை பாதிக்கிறது. தொழிலாளர்களின் வேலைகள் பறிபோகிறது. கல்பாக்கம் அணுமின் நிலயத்தை எப்போது முடிப்பாய்? அதற்காக பணம் ஒதுக்கி இருக்கிறாயா அப்போது தான் கூட்டு என்றுசொல்லியிருக்க வேண்டும்.

கடற்கரை கூட்டத்தில் பேசும்போதுகிருஷ்ணா நதிநீர் திட்டம் என்று சொன்னீர்கள். தமிழகத்தில் தண்ணீர் பஞ்சம் இருக்கிறது. கிருஷ்ணா நதிநீர் எப்போது வரும்? திட்டம்சேர்க்கப்பட்டதா? பணம் ஒதுக்கப்பட்டதா? அப்போது தான் ஒப்பந்தம் என்று சொல்லியிருந்தால் கருணாநிதி உண்மையிலேயே தமிழகத்தின் தானைத் தலைவர்தான்.

கருணாநிதி முதலமைச்சராக வந்தாலும் காங்கிரசை நம்பித்தானே



இருக்கவேண்டும்.

அரசியல் சட்டத்தின் 356வது பிரிவின்படி டிஸ்மிஸ் என்கிறீர்கள். அந்த சட்டத்தை பயன்படுத்தி தானே எம். ஜி. ஆரை வீட்டிற்கு போ என்றீர்

(6ம்பத்தி பார்க்க)

---

# தாய்க்குலம் ஆதரவு யாருக்கு?

**கேள்வி :** தாய்க்குலத்திடம் கருணாநிதி செல்வாக்கு எப்படி இருக்கிறது?

**பதில் :** தாலிக்குத் தங்கம் இல்லை. தாளிக்க வெங்காயம் இல்லை என்று கருணாநிதி கடந்த நாடாளுமன்றத் தேர்தலில் மோசடிப் பேச்சு பேசினார். வினை விதைத்தவன் வினையறுப்பான், தினை விதைத்தவன் தினையறுப்பான் என்ற பழமொழிக்கு ஒப்ப கருணாநிதி விதைத்த வினையை அறுக்கும் காலம்! இந்த சட்டமன்றத் தேர்தல் தான்.

தங்கத்தின் விலையை ரூ 400ஆகக் குறைத்துக் காண்பிக்கிறோம் என்று சவால்விட்டு, சுவரொட்டிகூட ஒட்டினார் கருணாநிதி- இப்போது ரூ 1072 விற்கிறது.

அரிசி, பருப்பு, சர்க்கரை-அன்றாட அத்தியாவசியப் பொருட்கள் யாவும் புரட்சித்தலைவர் ஆட்சியில் இருந்ததைவிட பல மடங்கு அதிகமாகி உள்ளன.

'தாலிக்குத்தங்கம் இல்லை... தாளிக்க வெங்காயம் இல்லை' என்ற கருணாநிதிக்கு சரியான பாடம் புகட்ட தாய்க்குலத்தினர் இந்த சட்டசபைத் தேர்தலைத் தேர்ந்தெடுத்துள்ளனர்!

நிச்சயமாக ... இந்தத் தேர்தலில் நன்றாகத் தாளித்துவிடுவார்கள்!

- நாதர்

---

வேட்பாளர் தேர்வில் குளறுபடி

# இகாங்கிரசுக்கு ஆதரவாக தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபடமாட்டோம்

கோவை எச். எம். எஸ். தொழிற்சங்கம் பகிரங்க அறிவிப்பு

கோவை, மே 7- இந்திராகாங்கிரஸ் ஆதரவு தொழிற் சங்கமான எச். எம். எஸ். தொழிற்சங்கம், இந்திரா காங்கிரசுக்கு ஆதரவாக தேர்தல் பிரச்சாரம் செய்வதில்லை என முடிவு செய்துள்ளது.

தமிழக சட்ட சபைத் தேர்தலில் வேட்பாளர் தேர்வில் இந்திரா காங்கிரஸ் கட்சியில் பெரும் குழப்பம் ஏற்பட்டது தெரிந்ததே.

பல தொகுதிகளில் கட்சியின் அதிகாரபூர்வ வேட்பாளர்களை எதிர்த்து இந்திரா காங்கிரஸ் கட்சியினர் போட்டியிடுகிறார்கள்.

எச். எம். எஸ் தொழிற் சங்கத்துடன் இணைந்த கோவை டெக்ஸ்டைல் தொழிலாளர் யூனியன், இந்திரா காங்கிரஸ் ஆதரவு தொழிற்சங்கமாகும்.

இச்சங்கத்தின் தலைவரான கே. என். குமாரசாமிதான் கோவை மாவட்ட இந்திரா காங்கிரஸ் கமிட்டியின் தலைவராகவும் உள்ளார்.

சங்கச் செயலாளரான ஏ. சுப்பிரமணியம் சிங்காநல்லூர் தொகுதியில் இருந்து போட்டியிட கட்சி மேலிடத்தில் மனு தாக்கல் செய்திருந்தார்.

அதேபோல் குமாரசாமி பல்லடம் தொகுதியில் போட்டியிட கட்சி தலைமையிடம் மனு தாக்கல் செய்திருந்தார், ஆனால்இந்த இருவருக்கும் தமிழக இந்திராகாங்கிரஸ் கட்சி தேர்தல் டிக்கெட் தரவில்லை.

கடைசிவரை தனக்கு தேர்தல் டிக்கெட் கிடைக்கும் என்ற நம்பிக்கையில், கே. என். குமாரசாமி பல்லடம் தொகுதிக்கு வேட்புமனு தாக்கல் செய்திருந்தார். ஆனால் தனக்கு தேர்தல் டிக்கெட் கிடைக்காததால் இறுதி நேரத்தில் அவர் தன் வேட்பு மனுவை வாபஸ் பெற்றார்.

சிங்காநல்லூர்தொகுதி திமுகவுக்கு கொடுக்கப்பட்டதால் கோவை கிழக்கு தொகுதியிலாவது தொழிலாளர் பிரதிநிதியாக போட்டியிட சுப்பிரமணியத்திற்கு தேர்தல் டிக்கெட் தருமாறு கோரப்பட்டது.

ஆனாலும் கட்சிமேலிடம் சுப்பிரமணியத்திற்கு தேர்தல் டிக்கெட் அளிக்கவில்லை.

இதுபற்றி ஆலோசிக்க சங்கக் கூட்டம் கே. என். குமாரசாமி தலைமையில் நடந்தது.

இக்கூட்டத்தில் இந்திரா காங்கிரஸ் கட்சி வேட்பாளர்களை ஆதரித்து தேர்தல் பிரச்சாரம் செய்வதில்லை என முடிவு செய்யப்பட்டது.

கோவையில் உள்ள பெரும்தொழிற்சங்கங்களில் ஒன்றான எச்எம்எஸ் இவ்வாறு முடிவு செய்திருப்பது இந்திரா காங்கிரஸ்காரர்களிடையே பெரும் அதிர்ச்சியை உண்டாக்கியுள்ளது.

நாடாளுமன்றத் தேர்தலின் இந்த யூனியனைச் சேர்ந்த தொழிலாளர்கள் இ. காங்கிரஸ் கட்சி வேட்பாளர்களின் வெற்றிக்காக தீவிரமாகப் பாடுபட்டதாகவும் அப்போது தொழிற் சங்க பிரதிநிதிகள் சட்டசபை தேர்தலில் போட்டியிட அனுமதிக்கப்படுவர் என கருப்பையா மூப்பனார் உறுதி கூறியிருந்ததாகவும் கூறப்படுகிறது.

---

# கொளுத்தும் வெயிலில் வீடு வீடாகச் சென்று கே. ஏ. கே. பிரச்சாரம்

சென்னை, மே. 7- கொளுத்தும் வெயிலில் இன்று வீடு வீடாகச் சென்று மக்களைச் சந்தித்து ஆதரவு திரட்டினார் கே. ஏ. கே.

ஆயிரம் விளக்குத் தொகுதி கழக வேட்பாளர் கே. ஏ. கே. இன்று மாடல் பள்ளித்தெரு, அஜீஸ்முல்க் தெரு போன்ற பகுதிகளில் வீடு வீடாகச் சென்று மக்களை சந்தித்தார்.

அவருடன் ஜேப்பியார், ப. அங்கமுத்து, சி. வி. அன்புத்தம்பி, பட்டுக்கோட்டை ராமச்சந்திரன், ஜெயபாலன் மற்றும் கழகத் தோழர்கள் உடன் சென்றனர்.

கே. ஏ. கே. க்கு மலர் மாலை அணிவித்து வரவேற்றனர். சில வீடுகளில் குளிர்பானங்கள் கொடுத்து, எங்கள் ஓட்டு இரட்டை இலைக்குத்தான் என்று மக்கள் உறுதி அளித்தனர்.

கழகத் தோழர்கள் கழகக் கொடிகளை ஏந்தி, இரட்டை இலைச் சின்னம் அணிந்து ஆர்வத்துடன் வந்து ஆதரவு திரட்டினார்கள்.

மகளிர் பிரிவைச்சேர்ந்த சந்திரா, கண்ணம்மாள், மற்றும் பலரும் வந்து ஆதரவு திரட்டினார்கள்.

---

மகளிர் பிரிவு செயலாளர்

## பா. வளர்மதி நிகழ்ச்சிகள்

மே- 7 அரக்கோணம் 8 பாடி, ஆலந்தூர் போக் ரோடு, 9- வேலூர் 10- திருவண்ணாமலை 11- திருச்செங்கோடு 12 - திருப்பூர் 13 உடுமலைப் பேட்டை 14, 15 மதுரை மேற்கு 16 விருதுநகர், சாத்தூர் 17, திருநெல்வேலி 18, 19 குமரி மாவட்டம் 20, 21, 22, தஞ்சை மாவட்டம் 23, 24 பண்ருட்டி, கடலூர் 25, 26 உத்திரமேரூர் 27, 28, 29 30 சென்னை.

---

(3 ம் பத்தி தொடர்ச்சி)

கள். என்னையும் 6 மாதத்தில் அனுப்ப மாட்டீர்கள் என்று சொல்ல என்ன உத்தரவாதம் என்று கேட்ட பிறகு அல்லவா கூட்டுக்கு ஒப்புக்கொண்டிருக்க வேண்டும்?

உருண்டாலும் பரவாயில்லை. ஒரு நாளாவது முதலமைச்சராக வர வேண்டும் என்று கருணாநிதி நினைக்கிறார்.

எம். ஜி. ஆருக்கு விட்டிருக்கும் சவாலை சொந்தபலத்தில் அல்லவா செய்ய வேண்டும்?

டெல்லிக்குப் போய் ஆள் பிடித்து வந்து அடிக்கப்பார்க்கிறார். சஞ்சய் காந்தியை கொண்டு தமிழகத்தில் அடிக்கப் பார்க்கிறார் அதே சஞ்சய் காந்தி கருணாநிதியை அடிக்கமாட்டார் என்பது என்ன நிச்சயம்? அப்போது உங்கள் பக்கம் நாலு பேர் வேண்டாமா?

திமுகவை காப்பாற்ற தொண்டர்கள் ஒன்று சேர்ந்து கருணாநிதியை முறியடிக்க வேண்டும்.

1967ல் அண்ணா அவர்கள் தேர்தலில் போட்டியிடும் போது சொன்னார், தமிழகத்திற்கு 1000 கோடி ரூபாய் ஒதுக்க மத்திய அரசு முன் வந்தால் திமுக போட்டியிலிருந்து விலகத் தயார் என்று சொன்னார்.

## பதவியே லட்சியம்

ஆனால் கருணாநிதிக்கு கருத்தெல்லாம் முதலமைச்சர் பதவிதான்,

திமுகவின் கோட்டை சென்னை என்று அன்பழகன் சொல்லியிருக்கிறார். அதனால்தான் கருணாநிதியும், அன்பழகனும், நேற்று வந்த மனோகரனும் சென்னையிலேயே போட்டியிடுகிறார்கள்.

நாடாளுமன்றத் தேர்தலின் போது தங்கத்தின் விலையை சொன்னார்கள். மூன்று மாதத்திற்கு முன்பு அவர்கள் வைத்த தீ அவர்களையே பற்றுகிறது.

தேர்தலையாவது தள்ளி வைத்தார்களா? சொன்ன வார்த்தைகள் மறக்கவில்லை. எழுதிய எழுத்துக்கள் அழியவில்லை. அதற்குள் தேர்தலை வைத்திருக்கிறார்கள்.

சிங்கத்தின் குகையில் குதிக்கிறேன் என்று சொல்லியிருக்கிறார். குதிக்கும் முன் சொல்லலாம். வெளியே வரும் போது பார்க்கலாம் சிங்கமா? எலும்பா? என்பதை.

இந்த தேர்தலில் ஜனநாயகம் காப்பாற்றப்பட, சர்வாதிகாரம் ஒழிய முதலாளித்துவம் அழிய ஜனநாயக முற்போக்கு கூட்டணியை ஆதரிக்க வேண்டும்.

இவ்வாறு தா. பாண்டியன் பேசினார்.

---

## பேச்சாளர் முகவரி:

திருச்சி கே. சுசீலா
எப். பிளாக் எண் 7
கபாலித் தோட்டம் 'லஸ்
சென்னை-4

நாஞ்சில் ஜோசன்
4 சதூர்தீன் தெரு
அமைந்தகரை
சென்னை-29

சாலிகிராமம் சாமி
12 பிள்ளையார்கோவில் தெரு
காந்தி நகர்
சாலிகிராமம்
சென்னை-600093

நாடோடி மன்னன்
28. யாதவாள் தெரு
கோட்டூர் சென்னை-85

செல்வி மணிமேகலை
7ம் வீதி காந்திபுரம்
கோவை-12

கவிஞர் த. உதயகுமார் பி. ஏ.
விட்டுக்கட்டி- அஞ்சல்,
திருத்துறைப்பூண்டி- வழி,
பின்: 614715

எஸ் வி எஸ்
(அர்ஸ் காங்.)
66 மல்லன் பொன்னப்ப முதலி தெரு
திருவல்லிக்கேணி
சென்னை-5

செல்வி ஜே. விஜயா
72, காந்திபுரம்
கோவை-12

---

## காஞ்சிபுரம் சட்டமன்ற தொகுதி தேர்தல் பணிக்குழு

| | |
|---|---|
| திரு. ஏ. பி. கண்ணபிரான் | தலைவர் |
| திரு. எஸ். பிரகாசம் | உறுப்பினர் |
| திரு கே. பாலாஜி | உறுப்பினர் |
| திரு. காஞ்சி பன்னீர்செல்வம் | உறுப்பினர் |
| திரு. எம் ஜி பாஷா | உறுப்பினர் |
| திரு. ராஜாராம் (ஆற்பாக்கம்) | உறுப்பினர் |
| திரு. மு விஸ்வநாத செட்டியார் (முசரவாக்கம்) | உறுப்பினர் |
| திரு. ஏ ஆர் சபாபதி (பாலுசெட்டிசத்திரம்) | உறுப்பினர் |
| திரு. தாமல் சண்முகம் (தாமல்) | உறுப்பினர் |
| ஒட்டிவாக்கம் முனுசாமி (ஒட்டிவாக்கம்) | உறுப்பினர் |
| திரு. சே. கோ. பெருமாள் | உறுப்பினர் |
| திரு. புலவர் மு சகாதேவன் | உறுப்பினர் |

தலைமைக் கழகம்
அனைத்திந்திய அண்ணா தி. மு. க.

---

தென் சென்னை மாவட்ட

## மகளிர் பிரிவின் ஆலோசனைக் கூட்டம்

தென் சென்னை மாவட்ட மகளிர் பிரிவின் ஆலோசனைக் கூட்டம் வரும் 10-5-80-ம் நாள் சனிக்கிழமை மாலை 4 மணியளவில் அவ்வை சண்முகம் சாலை - தலைமைக் கழகத்தில் ஆயிரம் விளக்குத் தொகுதி மகளிர் பிரிவு அமைப்பாளர் திருமதி சரசம்மாள் தலைமையிலும், மயிலைத் தொகுதி அமைப்பாளர் எஸ். ராதாபாய் முன்னிலையிலும் நடைபெறவிருக்கின்றது.

இக்கூட்டத்தில் ஆயிரம் விளக்குத் தொகுதி கழக வேட்பாளர் கே. ஏ. கே. அவர்களும் மற்றும் வேட்பாளர்கள் எச். வி. ஹண்டே, எம். எஸ். அப்துல்காதர், கபாலி, ஆகியோரும் கலந்துகொள்ளவிருக்கின்றனர். இக்கூட்டத்தில் தொகுதி, வட்ட அன்னை சத்யா மன்ற மகளிர் அமைப்பாளர்கள் அனைவரும் தவறாது கலந்துகொண்டு சிறப்பிக்க வேண்டுகிறேன்.

-சந்திரா மோகன்,
தென் சென்னை மாவட்ட மகளிர் பிரிவு அமைப்பாளர்

---



---

# தா. பாண்டியனை ஆதரித்து பெண்கள் வக்கீல்கள்- ஆசிரியர்கள் ஓட்டுவேட்டை

சென்னை, மே 7- ஜனநாயக முற்போக்கு கூட்டணி வேட்பாளர் தா. பாண்டியனை ஆதரித்து இன்று அப்பகுதி மீனவப் பெண்கள் தெருத் தெருவாக சென்று ஓட்டு கேட்கின்றனர்.

சென்னை ராயபுரம் தொகுதியில் ஜனநாயக முற்போக்குக் கூட்டணி வேட்பாளராக தா. பாண்டியன் போட்டியிடுகிறார்.

இவருக்கு ஆதரவாக இன்று அப்பகுதியை சேர்ந்த மீனவர்கள் மீனவ பெண்கள் தெருத் தெருவாக சென்று ஓட்டு கேட்கின்றனர்.

மற்றும் பட்டதாரி ஆசிரியர்கள், பெண் ஆசிரியர்கள் மேல் நிலை உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்கள் ஆசிரியைகள் தா. பாண்டியனை ஆதரித்து ஓட்டு கேட்கின்றனர்.

மேலும் அப் பகுதியில் என். ஜி. ஓக்கள், மாணவர் அணிகள், இளைஞர் அணிகள் வக்கீல்கள் ஆகியோர்இன்று முற்போக்கு கூட்டணி வேட்பாளர் தா. பாண்டியனை ஆதரித்து ஓட்டு சேகரிக்கின்றனர்.

## கலைக்குழு முகவரி :

மூத்த-மதன கலைக்குழு
சி. கே எஸ். மூர்த்தி
1, சீனிவாச பெருமாள் கோவில் தெரு,
திருவொற்றியூர்
சென்னை-19.

---

# கழக அணி வேட்பாளர்க்குப் போடுகின்ற ஓட்டு கருணாநிதி - இந்திரா சர்வாதிகாரத்துக்கு வேட்டு

Published by K. Ravindran on behalf of Thangamani Publications 275, Avvai Shanmugam Salai, Madras-14 and Printed by him at Print House, 1. First Main Road, United India Colony, Madras-24. Editor : E. PARASURAMAN

தமிழ்நாடுகாங்கிரஸ்(கா)தேர்தல்அறிக்கை:

# மாநில ஆட்சி கலைப்பு அரசியல்சட்டவிதியை நீக்க போராடுவோம்

சென்னை, மே 7-மாநில ஆட்சிகளைக் கலைக்கும் அதிகாரத்தை மத்திய அரசிடமிருந்து நீக்கி விடும் வகையில் அரசியல் சட்டத்தின்விதியை நீக்க தமிழ்நாடு காங்கிரஸ் (கா) போராடும் என்று தேர்தல் அறிக்கையில் தெரிவித்துள்ளனர்,

தமிழ்நாடு காங்கிரஸ் (கா) வெளியிட்டுள்ள தேர்தல் அறிக்கையில் தெரிவித்திருப்பதாவது;

"தலைவர் காமராஜ் காட்டிய பாதையில் தமிழ்நாடு காங்கிரஸின் மானம் காத்து, தமிழக மக்களின் நலன் காத்து, அதே வேளையில் தேசிய நீரோட்டத்தில் இருந்து எள்ளளவும் விலகாது நாட்டுக்கு நல்ல தொண்டாற்றுவோம்" என்ற உறுதியை தமிழ்நாடு காங்கிரஸ் (கா) மக்களுக்கு அளிக்கிறது.

மாநில ஆட்சிகளை கலைக்கும் அதிகாரத்தைமத்திய அரசிடமிருந்து நீக்கிவிடும் வகையில் அரசியல்சட்டம் 356வது விதியை அரசியல் சட்டத்திலிருந்து நீக்க போராடும்.

## நேரு உறுதிமொழி

மத்திய ஆட்சி மொழி பற்றி ஜவஹர்லால் நேரு அளித்த வாக்குறுதி உணர்வுப்பூர்வமாக மதிக்கப்படுவதுடன் அந்த வாக்குறுதி அரசியல் சட்டத்திலும் இடம் பெறவேண்டும்.

நேரு வகுத்ளித்த திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சிமுறை நிலைப்படுத்தப்பட வேண்டும். மாநில திட்டக்குழுக்களுக்கான பணி விரிவாக்கப்பட வேண்டும்.

அவசியமான தொழில்களை தேர்ந்தெடுத்து தேசியமயமாக்கப்படும் கொள்கையினை கடைபிடிக்க வேண்டும். ஏகபோக முதலாளித்துவ சாம்ராஜ்ஜியங்கள் தகர்த்து எறியப்படவேண்டும்.

குறைந்தஊதியம்பெறும் பிரிவினர், மத்தியதர வர்க்கத்தினர், சமுதாயத்தின் பலவீனப் பகுதியினர் விலைவாசி உயர்வால் பாதிக்கப்படுவதைத் தடுக்கவேண்டும்.

வேலைசெய்யும் உரிமை அரசியல் சட்டத்தில ஜீவாதார உரிமையாகச் சேர்க்கப்படவேண்டும். வேலையற்ற பட்டதாரிகளுக்கு வேலை கிடைக்கும் வரை நிதி உதவி அளிக்கப்படவேண்டும.

ஒருங்கிணைக்கப்பட்ட நிலச்சீர்திருத்தச் சட்டம் புரட்சிகரமாக இயற்றப்பட்டு மிகத்தீவிரமாக அமுலாக்கப்படவேண்டும். விவசாய தொழிலாளர்களுக்கான குறைந்தபட்சக் கூலியை உயர்த்தி நிர்ணயிப்பதோடு, அவை கட்டாயமாக அமுலாக்க விசேஷ நிர்வாக அமைப்பும் ஏற்படுத்த வேண்டும்.

விளைபொருட்களை ஈடாக வைத்து தாராளமாகக் கடன் வழங்கும் கொள்கை இயற்கை பாதிப்புகளால் விவசாயிகளுக்கு அளிக்கப்படும் பயிர் இன்சூரன்ஸ் பணப்பயிர்களுக்குவிதிக்கப்படும் வரியை ரத்து செய்தல், தண்டத் தீர்வை முறையை அகற்றுதல் ஆகியவற்றைஉடனடியாக அமுல் செய்ய வேண்டும்.

## அரசு ஊழியருக்கு போனஸ்

தொழிலாளர்களுக்கான தேசிய ஊதியக் குழுவை உருவாக்குதல், எல்லாத் துறைகளிலும் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு போனஸ் படிப்படியாக அரசு ஊழியர்களுக்கும் போனஸ் அளிக்கப்பட வேண்டும்.

கைத்தறி நெசவாளர்களுக்கு நியாய விலையில் நூல், நியாயமான ஊதியம், தொழில் பாதுகாப்பு ஆகியவை அளிக்கப்பட வேண்டும்.

கிராமப்புற கைவினைஞர்களின் வாழ்க்கை மேம்பாட்டுத்திட்டம், கிராமங்களுக்கு பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்கும் திட்டம் விரைவாக செயல்படுத்தப்படவேண்டும்.

சிவில் உரிமைப் பாதுகாப்புச் சட்டம் தீவிரமாக அமுல்படுத்தப் பட வேண்டும். எல்லா மாநிலங்களிலும் அரிஜன நலத்துறையை அந்தந்த மாநில முதலமைச்சர்களே ஏற்று நடத்தவேண்டும்.

சிறுபானமையோர் தேசிய நீரோட்டத்தில் உரிமையோடு கலந்து உறவாடவும், அரசு உத்தியோகங்களில் உரிய இடங்கள் பெறவும் தமிழ்நாடு காங்கிரஸ் தோள் கொடுத்துத் துணைநிற்கும்.

தேர்ந்தெடுக்கப்படும் எல்லா அமைப்புகளிலும் பெண்களுக்கு உரிய பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும்.

## வறுமை ஒழிப்பு திட்டம்

வறுமை ஒழிப்புக்காக விசேஷதிட்டங்கள் தீட்டப்பட்டு கால நிர்ணயத்தோடு தீவிரமாக செயல்படுத்தப்பட வேண்டும்.

சமதர்ம சமுதாயம் அமைப்பதில் சமூக நலத் திட்டங்கள் மகத்தானவை என்ற உணர்வோடு இத்திட்டங்கள் தீவிரமாக அமுல் நடத்தப்படவேண்டும்.

கேரளத்தில் மேற்கே பாய்ந்து ஓடி வீணாகும் நதிகளின் நீரை கிழக்கே திருப்பி தமிழ் நாட்டில் பயன்படுத்த விரைவான நடவடிக்கைகள் எடுத்தல்.

பெருந்தலைவர் காமராஜ் தமிழக முதலமைச்சராக இருந்தபோது உருவாக்கப்பட்ட கிருஷ்ணநதி திட்டத்தை உடனடியாக செயல்படுத்தி சென்னைக்கு குடிநீர் திட்டம் அளிக்கப்படவேண்டும்.

விற்பனை வரிச்சட்டத்தைத் திருத்தி எளிதாக்குதல். நகர்ப்புறங்களில் விற்பனை வரி மீது விதிக்கப்படும் சர்சார்ஜை ரத்து செய்தல் ஆகியவை அமுலாக்கப்படவேண்டும்.

தசியசிந்தனையும், தன்னம்பிக்கையும் மாணவர்களுக்கு மட்டும் கல்வி முறை வகுக்கப்பட்டாக வேண்டும்.

ஏகாதிபத்திய எதிர்ப்பு, ஆயுதக்குறைப்பு, வளர்ந்துவரும் நாடுகளுக்கான பொருளாதாரப் பாதுகாப்பு, உலக சமாதானம் போன்ற விஷயங்களில் நேருஜியின் இலட்சியப்பார்வை முழுமையாகப் பிரதிபலிக்க வேண்டும்.

பொதுவாழ்வில்தூய்மை நாணயம், ஒழுக்கம் முதலிய அறப்பண்புகள் கடைபிடிக்கப்படவேண்டும்.

இவ்வாறு தமிழ்நாடு காங்கிரஸ் (கா) தேர்தல் அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## மார்க்சிஸ்ட் தலைவர் பி. ராமமூர்த்தி சுற்றுப்பயணம்

மார்க்சிஸ்ட் தலைவர் பி. ராமமூர்த்தி சுற்றுப்பயண விவரம் வருமாறு:

மே 7-ந்தேதி-தென்னாற்காடு மாவட்டம் கள்ளக்குறிச்சி சங்கராபுரம் உள்பட. மே 8 சேலம் மாவட்டம் மே 9- பெரியார் மாவட்டம்(ஈரோடுபெருந்துறை)

மே 10-திருச்சி மாவட்டம்

மே 11, 12 மதுரை மாவட்டம்

13, 14 திருநெல்வேலி மாவட்டம்

15, 16 கன்னியாகுமரி மாவட்டம்

17, மதுரை மாலை பொதுக் கூட்டம் 18, 19 கோயம்புத்தூர் மாவட்டம்

20" 21, 22 தஞ்சை மாவட்டம்

மே 23- தென்னாற்காடு (காட்டு மன்னார் கோயில் உள்பட)

24 வடஆற்காடு (குடியாத்தம்)

25 சென்னை

குடிபோதையில் இ. காங்கிரசார் கூச்சல்-குழப்பம்

# அறையில் ஓடி ஒளிந்த எம். பி. சுப்பிரமணியம்: ஓட்டலிலும் கலாட்டா

சென்னை, மே. 7- வேட்பாளர் தேர்வில் நடந்த பாரபட்சபோக்கு குறித்து முறையிட வந்த இந்திரா காங்கிரசாரிடம் இருந்து தப்ப தலைவர் எம். பி. சுப்பிரமணியம் கட்சி அலுவலக அறை ஒன்றில் ஒளிந்து கொண்டார்.

எம். பி. சுப்பிரமணியம் தங்கியிருந்த ஓட்டல் அறையிலும இந்திரா காங்கிரசார் கலாட்டாவில் ஈடுபட்டனர்.

தமிழக சட்டசபைதேர்தலுக்கான வேட்பாளர் தேர்வுகுறித்து தமிழக இந்திரா காங்கிரசில் குழப்பம் ஏற்பட்டுள்ளது தெரிந்ததே.

சட்டமன்ற இந்திரா காங்கிரஸ் அலுவலகத்தில் கட்சித்தலைவர் சுப்பிரமணியம் மற்ற தலைவர்களுடன் ஆலோசனை நடத்திக்கொண்டிருந்த போது அதிருப்தி இந்திரா காங்கிரசார் சுப்பிரமணியத்திற்குஎதிராக கோஷங்களை எழுப்பியவாறே அலுவலகத்திற்குள் நுழைய முயன்றனர்,

### ஓட்டலிலும் கலாட்டா

உடனே எம். பி. சுப்பிரமணியம் அலுவலக அறை ஒன்றின் உள்ளே சென்று கதவை தாளிட்டுக் கொண்டார்.

ஆர்ப்பாட்டத்தில் ஈடுபட்ட சில இந்திரா காங்கிரசார் குடிபோதையில் இருந்ததாக கூறப்படுகிறது.

எம். பி. சுப்பிரமணியம் தங்கியிருந்த ஓட்டல் அறையிலும் அதிருப்தி இந்திரா காங்கிரசார் கலாட்டாசெய்தனர். யார்வந்து தன்னைக் கேட்டாலும் தங்கியிருக்கும் அறை எண்ணை சொல்லவேண்டாம் என

(3-ம் பக்தி பார்க்க)

# லண்டனிலிருந்து 1.5 லட்சம் டன் சர்க்கரை வாங்க மத்திய அரசு கொடுத்த அநியாய விலை

## மத்தியமந்திரிகளுக்கே தெரியாமல் இறக்குமதி நடந்த வேடிக்கை

புதுடெல்லி, மே 7- லண்டனிலிருந்து மத்திய அரசு ஒன்றரை லட்சம் டன் சர்க்கரையை அநியாய விலைக்கு இறக்குமதி செய்துள்ளது. மத்திய மந்திரிகளுக்குத் தெரியாமலே இந்த இறக்குமதி நடந்ததாம்.

காபிக்குச் சர்க்கரை இல்லை. தாலிக்குத் தங்கம் இல்லை என்று நாடாளுமன்றத் தேர்தலின் போது இ. காங்கிரஸ் அணியினர் கூறினார்கள் அல்லவா?

இவர்கள் ஆட்சிக்கு வந்த பிறகும் சர்க்கரை பஞ்சம் நீடித்து கிலோ ரூ. 5.90 ஆக விற்கிறது,

நிலைமையைச் சமாளிக்க வெளிநாட்டிலிருந்து சாக்கரை இறக்குமதி செய்யப்படும் என்று முன்பு மத்திய அமைச்சர்கள் அறிவித்தனர்.

பின்னர் வெளிநாடுகளில் சர்க்கரை விலை அதிகமாக இருப்பதால் இறக்குமதி சாத்தியமல்ல என்று மத்திய அரசு அறிவித்தது.

இதற்கிடையில் லண்டனிலிருந்து 1.5 லட்சம் டன் சர்க்கரையை இந்தியா வாங்கியுள்ளது.

ஆனால் சர்க்கரை பிரச்சினையைக் கவனிக்கும் உணவு இலாகாவுக்கு இந்த இறக்குமதி பற்றி ஒன்றும் தெரியாதாம்.

இறக்குமதி சர்க்கரை பேரம் முடிந்த விதம் பற்றி விசாரித்து தகவல் அறியுமாறு வர்த்தகத்துறை அமைச்சர் பிரணப்முகர்ஜிக்கு விவசாயத்துறை அமைச்சர் ராவ் வீரேந்திர சிங் எழுதியுள்ளார்.

### நடந்தது எப்படி?

அரசு வர்த்தகக் கழகம் (எஸ. டி. சி.) தான்பேச்சுவார்த்தை நடத்தி சர்க்கரை இறக்குமதிசெய்திருக்கிறது.

வர்த்தக இலாகா அதிகாரிகள் முன்னிலையில் இந்த பேச்சுவார்த்தை நடந்திருப்பது தெரியவருகிறது.

இறக்குமதி ஏற்பாடுகள் இவ்வாறு நடந்துள்ளன.

ஆனல சர்க்கரைஇறக்குமதிசெய்யவேண்டும்என்ற முடிவை எடுத்தவர் யார் என்று தெரியவில்லை,

பொதுவாகஒருபொருள் இறக்குமதி செய்யவேண்டுமானால்சம்பந்தப்பட்ட இலாகாவுடன்கலந்துபேசித்தான் முடிவு எடுக்க வேண்டும். சர்க்கரை இறக்குமதி செய்ய வேண்டுமானல் விவசாய இலாகாவுடன் தொடர்புடைய உணவுத் துறையுடன் கலந்து பேசி முடிவு எடுத்திருக்க வேண்டும், ஆனல் அந்த இலாகாவை விசாரித்தபோது, நாங்கள் சர்க்கரை இறக்குமதி செய்யுமாறு கூறவும்இல்லை இறக்குமதி செய்வதாக யாரும் எங்களிடம் ஆலோசனை நடத்தவும் இல்லை என்று கூறினார்கள்.

சர்க்கரை இறக்குமதி செய்யத் தேவை இல்லை. இருக்கின்ற கையிருப்பை வைத்தே சமாளித்துக் கொள்ளலாம் என்று விவசாய அமைச்சர் ராவ் வீரேந்திரசிங் ஏற்கனவே கூறிஇருநதார.

ஆனல் அரசு வர்த்தகக் கழகம் சர்க்கரையை அநியாய விலை கொடுத்து லண்டன் மார்க்கெட்டிலிருந்து வாங்கி இருக்கிறது.

சர்க்கரை விலையைக் குறைப்பதற்காக சர்க்கரை இறக்குமதி செய்துள்ள போதிலும் கப்பல்கட்டணம் எல்லாம் சேர்த்துப் பாரத்தால் ஒருகிலோ சர்க்கரை விலை 6 ரூபாய் ஆகிறது, அப்படியானல் ஆறேகால் ரூபாய்க்குச் சர்க்கரையை விற்கவேண்டும். மத்திய அரசு என்ன விலைக்கு விற்கப்போகிறது என்பது தெரியவில்லை.

(6ம் பத்தி தொடர்ச்சி)

ஓட்டல் நிர்வாகிகளிடம் எம். பி. சுப்பிரமணியம் கூறியிருந்தாராம்.

ஆனல் அதிருப்தி காங்கிரசார் ஒட்டலுக்கு போன் செய்து, மத்திய மந்திரி வெங்கட்ராமன், மற்றும் பிரதமர் செயலாளர் பேச வேண்டும், எனக் கூறி எம். பி. சுப்பிரமணியம் தங்கியுள்ள அறை எண்ணை தெரிந்து கொண்டனராம். பிறகு கூட்டமாக அந்த அறைக்கு இந்திரா காங்கிரசார் சென்று சுப்பிரமணியத்தை எதிர்த்து கோஷமிட்டனர் இதையடுத்து அங்கு ரகளை ஏற்பட்டது. நாற்காலிகளும் மேசைகளும்உடைக்கப்பட்டன. பிறகு அங்கு இரு பெட்டியில் இருந்த 3 ஆயிரம் ரூபாய் பணம் மற்றும் தஸ்தாவேஜுகளை தூக்கிச் சென்றுவிட்டனர்.

ஓட்டல் நிர்வாகிகள் ரகளை குறித்து போலீசாருக்குத் தெரிவிக்கவே போலீசார் விரைந்துவந்து எம். பி. சுப்பிரமணியத்திடம் விசாரணை நடத்தினார்கள். ஆனல் இது குறித்து எம். பி. சுப்பிரமணியம் புகார் தெரிவிக்கவில்லை என போலீசார் கூறினார்கள்.

## தலைமைக் கழக அறிக்கை

எண்: 46-80

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்திலிருந்து நீக்கிவைக்கப்பட்டு இருந்த திருவொற்றியூர் இரா. புருஷோத்தமன் நேரிலும், கடிதம் மூலமாகவும் அளித்த விளக்கத்தை ஏற்று அவர் கழகத்தில் உறுப்பினராகப் பணியாற்ற இன்று முதல் அனுமதிக்கப்படுகிறார்.

இவ்வறிவிப்பு திருமிகு.புரட்சித்தலைவர் அவர்கள் ஒப்புதலுடனும், பொதுச்செயலாளர் டாக்டர் நாவலர் அவர்களின் அனுமதியுடனும் வெளியிடப்படுகிறது.

எச். வி. ஹண்டே, எம்.எல்.சி,
அமைப்புச் செயலாளர்.

சென்னை-14
7-5-1980

அறிக்கை எண்-30

# கழக உறுப்பினர் அட்டை வழங்குதல்

கீழ்க்கண்ட ஊர்களுக்குச் சம்பந்தப்பட்ட அமைப்பாளர்கள் முகவரிக்கு உறுப்பினர் அட்டைகள் அஞ்சல் மூலமாக அனுப்பிவைக்கப்பட்டுள்ளன.

அமைப்பாளர்கள் உறுப்பினர் அட்டைகளை முறையாக கழக உறுப்பினர்களுக்கு உடனடியாக வழங்கிடவேண்டும்,

உறுப்பினர் அட்டைகள் வழங்குவதில் எவ்விதக் குறைபாடுகளும் இல்லாமல் செயல்படுவது அமைப்பாளர்களின் பொறுப்பாகும். வழங்க மறுத்தால் அமைப்பாளர்மீது கடுமையான முறையில் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும். உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் உறுப்பினர் அட்டையைப் பாதுகாப்பாக வைத்திருக்கவேண்டும்.

உறுப்பினர் சேர்க்கப்பட்டுள்ள, உறுப்பினர் தாள்களையும், உரிய தொகையையும் உடனடியாக தலைமை நிலையத்திற்கு அனுப்பிவைக்குமாறு பொறுப்பானவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

எம். எஸ். அப்துல்காதர்
தலைமை நிலையச் செயலாளர்

### தஞ்சை மாவட்டம்

செட்டிகுளத்து சந்து - எம் கணேசன்
கூறைநாடு (17-வது வார்டு) தே தமிழரசன்
ரயிலடி - அன்புகண்ணன்
கூறைநாடு (19-வது வார்டு) - ஜே ஆப்ரகாம்
பட்டுக்கோட்டை - சோ நாடிமுத்து
22-வது வார்டு தஞ்சை - சூ செபஸ்டியன்
கீழ்வாசல் - பி என் கே முகமது அலி
தஞ்சை (32-வது வட்டம்) கா கலியமூர்த்தி
தஞ்சை(33வதுவட்டம்) -பா நாகலிங்கம்
பூநதோட்டம் - பூவை. மூ வஞ்சிக்காவை
கும்பகோணம் 9 வது வட்டம் - டி ஆறுமுகம்
கும்பகோணம் 11 வது வட்டம் - வி முத்துசாமி
கும்பகோணம் 11 வது வட்டம் - வி எஸ் பாண்டியன்
கும்பகோணம் 17 வது வட்டம் - ஜி ஜி கலிய பெருமாள்
தஞ்சை 18வது வட்டம் ஜி ஆர் ராஜன்
கும்பகோணம் 21 வது வட்டம் - முத்துபழம்நீ
கும்பகோணம் 21வது வட்டம் - குடந்தைநாதன் (எ) ஏ விஸ்வநாதன்
கும்பகோணம்(28வதுவட்டம்)- ஆர் பன்னீர்செல்வம்
தஞ்சை (30 வதுவட்டம்) - ஜி கல்யாணராமன்
கும்பகோணம் (32வதுவட்டம்) - எ சுப்பரமணியன்
கும்பகோணம் (36வதுவட்டம்) - மூ திராவிடகனி
கள்ளிவயல்தோட்டம் - முகமதுஇக்பால்
பள்ளத்தூர் - க கோவிந்தராசு
அத்தாணி - பெ அ சுப்பிரமணியன்
வெண்மடம் - சி சீனிவாசன்
ஆவிடையாளிக்கோட்டை - மு ந தர்மலிங்கம்
பூவானம் - எம் ஏ தேவதாஸ்
மொடச்சிக்காடு - வெ ராமசாமி
பள்ளத்தூர் மேற்கு - வீரசங்கரலிங்கம்
கொள்ளுக்காடு - எஸ் ஆர் காத்தையன்
பாவாஜிக்கோட்டை - ஆர் சுப்பிரமணியன்
மோக்கூர் - எம் நல்லப்பன்
மத்தங்காடு - சி வீரப்பன்
விக்ரமம் - மா பன்னீர்செல்வம்
மண்டலக்கோட்டை - ஏ. தியாகராஜன்
சிரமேல்குடி - ஆர்.கே. சிவபுண்ணியம்
ஆலத்தூர் - ஆர், சின்னையன்
வேப்பங்குளம் - பி சாமிதுரை
பட்டுக்கோட்டை - பெ வீராசாமி
புலவஞ்சி - பி மாரிமுத்து
அத்திவட்டி - ஆர் ஏ மாணிக்கம்
கீழக்குறிச்சி - கே வைரமூர்த்தி
ரெகுநாதபுரம் - எம். கருப்பையன்
அம்மளிசத்திரம் - க. வடுகநாதன்
பூவலூர் - ஆர் மயில்வாகனன்
திருச்சிற்றம்பலம் - மு சோமசுந்தரம்
காயாரோகனநகர் - கே முனியாண்டி
தெற்குபால்பண்ணைச்சேரி - எஸ். ராஜசேகரன்
வெளிப்பாளையம் - ஆர். மூக்கையா
சித்துக்காடு - ஏ எம் ஜெயசந்திரன்
பெரியநாயகிபுரம் - க சிங்காரம்
உப்புவிடுதி - கே மருதமுத்து
மடத்திக்காடு - ஜ் பக்கிர்சாமி
கொற்கை - கிருஷ்ணமூர்த்தி
பைங்கால் - வி கருப்பையன்
நீலகண்டபுரம் - சொ கணேசன்
ஆண்டாக்கோட்டை - பொ கொளந்தைசாமி
நாட்டாங்காடு - கு ஆப்புசாமி
உதயசூரியபுரம் - என் பாலசுப்பிரமணியன்
கல்லூரணிக்காடு - எஸ் தசரதராமன்
ஆவணம் - ஆர் வீரசிங்கம்
சொர்ணக்காடு - எஸ் கோவிந்தராசன்
பேராவூரணி - பி எஸ் கருப்பையன்
கலித்தூர் - ந சுப்பையன்
ஆத்தாளூர் - எஸ் நடராசன்
ஆதனூர் - எம் ஆர் சின்னையா
சிவன்குறிச்சி - கே சுப்பிரமணின்
ஆதனூர் - பி மரிஅலங்காரம்
பொககன்விடுதி - பொ பெருமாள்
நாடாக்காடு - து ராஜகோபால்
வாடிக்காடு - துரை கலியமூர்த்தி
செருவாவிடுதி - வே சுப்பிரமணியன்
தென்னங்குடி - கி மா வேலுச்சாமி
மணவயல் - வை நாகமுத்து
பவுண்டுதோட்டம் - பி பாண்டியன்
நாகப்பட்டினம்10-வதுவார்டு - பி எஸ் ராஜேஸ்வரன்

### வடஆற்காடு மாவட்டம்

கல்லப்பாடிகிராமம் - வி அரங்கசுவாமி
ஜிட்டபல்லி - சி கோவிந்தன்
மேல்முட்டுக்கூர் - எம் வெங்கடேசன்
பழையகிருஷ்ணபுரம் - பி தருமன்
அணைகட்டிபுதூர் - டி ரங்கநாதன்
காளாம்பட்டுகிராமம் - டி இன்பராஜ்
பிரம்மபுரம் - பி கே வெங்கடேசன்
கரசமங்கலம் - டி ராமு

மற்ற மாவட்ட, தொகுதி, ஒன்றியங்களில் உள்ள கிளைகளுக்கு உறுப்பினர் அட்டைகள் அனுப்பப்பட்டு வருகின்றன

# 'இரும்புக்கரம்' கருணாநிதிக்குப் பாடம் புகட்டிட கரும்புமனப்புரட்சிதலைவர் அணிக்குவாக்களிப்பீர்

# அண்ணா




**எஸ். சந்தானலட்சுமி நிகழ்ச்சிகள்**

மே. 18, 19, 20, 21
நெய்வேலி-2

முகவரி:
எஸ். சந்தானலட்சுமி
66, சிமிட்டரி சாலை
பழைய வண்ணை
சென்னை - 21

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

யினர்?

அன்று சேலம் நரசோதிபட்டியில் வீரபாண்டி ஆறுமுகம எம். எல். சியை விட்டு நம்மைத் தாக்க முயற்சி நடக்கவில்லையா? நாஞ்சிலார் அவர்களே, உண்மையிலேயே கருணாநிதி உங்கள் மேல் அன்புள்ளவரா? சொல்லுங்கள்.

கருணாநிதியைப் பற்றி உங்களுக்குத் தெரியாதா? அப்படிப்பட்ட அரசியல் சூதாடியை- பதவிக்காக மட்டும் ஆதரிப்பது அரசியல் சந்தர்ப்பவாதப் அல்லவா?

நேற்று புனுவில்தேர்தல் பொதுக் கூட்டத்தில் பேசிய பிரதமர் ஒன்பது மாநிலங்களையும் ஏன்கலைத்தேன் என்பதற்குவிளக்கம் கொடுத்திருக்கிறார்,

டெல்லியுடன் இணைந்து போகாமல்- மாநிலத்தில் சட்டம் ஒழுங்கும் கெடும்படியாக- அதே சமயம் பொருளாதாரக் கடுமை காரணமாகவும் மாநில அரசுகள் வாடுவதனுலும் சட்டசபைகளைக் கலைக்க நேரிட்டது என்று கூறியுள்ளார்.

## சட்டம்-ஒழுங்கு

புரட்சித்தலைவர் ஆட்சியில் சட்டம் ஒழுங்கு கெட்டுவிட்டதாம்,

இப்பொழுது யாருடைய ஆட்சி நடைபெறுகிறது? கவர்னர் ஆட்சி. அது தான் மத்திய அரசின் ஆட்சி, இந்த ஆட்சியில் வேலியே பயிரை மேய்கிறது. கடந்த 2ம் தேதி இந்து ஆங்கில நாளிதழில் வந்திருக்கிற செய்தியைப் பார்த்தாலே இவர்களுடைய ஆட்சியில் சட்டம் ஒழுங்கு எப்படி இருக்கிறது என்பது தெரியும்.

கோவையில் பாலிடெக்னிக்கில் படிக்கும் மாணவியிடம் தங்கச் சங்கிலியை ஒரு காவல் துறை சி ஐ டி இலாகா ஊழியனே பறித்துள்ளான். பட்டப்பகலில் இது நடந்திருக்கிறது.

அதுமட்டுமில்லை- திருச்சியில் ஒரு கல்லூரி பெண் பேராசிரியையிடமிருந்தே, மத்திய அரசின் ரயில்வே போலீஸ்காரன் தங்கச் சங்கிலியை திருடி, ஓடி, போலீசில் பிடிபட்டான்.

இவை இன்று வரும் செய்திகள். இந்த ஆட்சியில் சட்டம், ஒழுங்கு எப்படி இருக்கிறது என்பதை காட்டவே இதைக் கூறினேன்.

## புரட்சித்தலைவர் அணி வெல்க

ஆகவே இப்படிப்பட்ட- வேலியே பயிரை மேயும் ஆட்சி ஏற்படாமல் இருக்க அதிக்கிரமங்கள் அநியாயங்கள், போன்றவை நடைபெறாத ஆட்சியை தேர்ந்தெடுக்க ஊழலற்ற ஆட்சி அமைய குருதியில் பூத்த இயக்கமாம் அனைத்திந்திய அண்ணா திமு கழகத்தின் பூரண ஆட்சி அமைய கழகஅணியின்வேட்பாளர்களுக்கு வாக்களிக்க வேண்டுகிறேன்.

இவ்வாறு கே. ஏ. கே. பேசினார்.

வேலியே பயிரை மேயும் கொடுமை:

# கவர்னர் ஆட்சியில் சட்டம்-ஒழுங்கு சீரழிவு

**கே. ஏ. கே. விளாசல்**

**சென்னை, மே 7-புரட்சித்தலைவர் ஆட்சியில்சட்டம்-ஒழுங்கு இல்லை என்று பொய் சொன்னார்கள். இன்று கவர்னர் ஆட்சியில் சட்டம் ஒழுங்கு பெரும்பாடுபடுகிறது. வேலியே பயிரை மேயும் விபரீதம் நடக்கிறது என்று கே ஏ கே கூறினார்.**

மயிலைத் தொகுதி கழக வேட்பாளர் டி. கே. கபாலியை ஆதரித்து அடையாறு சாஸ்திரி நகரில் கழகக் கூட்டம் நடைபெற்றது.

கழகத் தியாகி வத்தலகுண்டு ஆறுமுகத்தின் நினைவு நாளான மே 5ம் நாளன்று கே.ஏ.கே.தர்மயுத்தத்தின் முதல்கட்ட தேர்தல் பிரச்சாரப் பொதுக்கூட்டத்தில் பங்கேற்று பல்லாயிரக்கணக்கான மக்களிடையே உரையாற்றினார்.

கூட்டத்திற்கு வட்ட அமைப்பாளர் ஆ. கோ. கோபால் தலைமை தாங்கினார். சிவானந்தம் முன்னிலையில் மாணிக்கம் வரவேற்றார்.

தோழர்கள் வேலாயுதம், துரைக்கண்ணு. இரா. மூர்த்தி, நாஞ்சில் புதுமையாளன், நாடோடி மன்னன், சேக்தாவூத். தட்சிணாமூர்த்தி, மயிலை எம். ஜி. ஆர். மன்ற மந்தவெளி நடராசன், கே. ராமசாமி சைதை தமிழ்ச் செல்வன், மயிலை ராதாபாய், மயிலை தமிழ்மணி, வண்ணை கோவிந்தன், அன்புரோஸ் டி.கே. கபாலி, புலவர் இந்திரகுமாரி ஆகியோர் உரையாற்றினர்.

அவர் பேசுகையில்கூறியதாவது:-

இறுதியாக கே.ஏ.கே. உரையாற்றினார்.

"தருமத்தின் வாழ்வுதனை சூதுகவ்வும்-தருமம மறுபடி வெல்லும்" என்று பாஞ்சாலி சபதத்தில் அமரகவி பாரதி கூறியதைப்பால், மீண்டும் புரட்சித்தலைவர் அவர்கள் தமிழகத்தின் முதல்வராக வர உங்கள் மேலான வாக்குகளைத் தந்து நல் வாய்ப்பினை நல்கவேண்டும்.

தருமயுத்தத்தின் முதல் நாள் இன்று முதல் கூட்டத்தில் கலந்து கொண்டு சகோதரர் கபாலியை ஆதரித்துப் பேசுகின்ற இந்த நேரத்தில் இயற்கையாக ஒரு கருத்து என் இதயத்தில் பட்டுத்தெரித்தது.

இன்று காலை எழுந்தவுடன் அந்தக் கருத்து என்னுள் இழையோடிற்று. இன்றைக்கு ஏழு ஆண்டுகளுக்கு முன்,- 1973-ம் ஆண்டு அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தை புரட்சித்தலைவா நிறுவி, முதன்முதலாக திண்டுக்கல் தேர்தல் களத்திலே - கழக வேட்பாளரை நிறுத்திய நேரத்தில் - அங்கே ஓயாது உழைத்த ஒரு படைவீரனாக - பட்டாளத்துச் சிப்பாயாக விளங்கினானே - வத்தலக்குண்டு ஆறுமுகம், அவனை கருணாநிதிக் கட்சியினர் கொன்ற நாள் மே 5ம் நாள்.

ஏழு ஆண்டுகளுக்கு முன்னர் இதே மே திங்கள் 5ம் நாளில் கழகப் பொதுக் கூட்டத்தை நடத்திவிட்டு வீடு திரும்புகையில் கருணாநிதி கட்சி குண்டர்களால் வெட்டிக் கொல்லப்பட்ட நாள்-அந்த நாள் - இந்த நாள்!

அந்த உணர்வு என் நெஞ்சை வருடியது. அந்த வீரத்தளபதி உயிர்பலி கொள்ளப் பட்ட காரணத்தால்தான் நான்கைந்து ஆண்டுகளிலேயே அடக்குமுறை ஆட்சி புரிந்த-ஊழல்ஆட்சி புரிந்தகருணாநிதியை இறக்கிக்காட்டினோம்.

அப்படிப்பட்ட தியாகியின் தினத்தில் தேர்தல் பிரச்சாரத்தை முதன்முதலாக துவக்குகின்றபோது புதிய உணர்வும், புதிய தெம்பும், புதிய உறுதியும் என்னுள் பிறக்கிறது.

## கருணாநிதி யார்?

கபாலி பேசும்போது பல விபரங்களை அடக்கமாக, நிதானமாக, கூறத் துவங்கினார் என்ற போதிலும், பேசத் துவங்கியவுடன் தன்னை மறந்து, இதயம் திறந்து "கருணாநிதி யார்?" என்பதை கூறிவிட்டார்.

கடந்த எட்டாண்டுகாலமாக நாம்மேடைதோறும் முழங்கி வந்ததை- எந்த காரணத்திற்காக புரட்சித் தலைவரை 72 அக்டோபரில் கருணாநிதி தூக்கி எறிந்தாரோ-அந்த கருணாநிதியை 1976 ஜனவரி31ல் மக்கள் மன்றம் தூக்கி எறியவேண்டியகட்டாயம் ஏற்பட்டதை-

அப்படிப்பட்ட கருணாநிதியின் கொடுமையான, அக்கிரம ஆட்சியை- எப்படி அகற்றப் பாடுபட்டோம் என்பதை நினைத்த போது நெஞ்சின் உணர்வுகள் வந்து வந்து சென்றன.

## ஆங்கில ஏட்டின் கணிப்பு

இன்றைக்கு வரும 31ம் தேதிக்குப் பின் புரட்சித் தலைவர் ஆட்சிதான் தமிழகத்தில் என்பதை நாடு முடிவு எடுத்துவிட்டது, பிரபல ஆங்கில ஏடான "Aside" என்ற ஏடு புரட்சித் தலைவரைப் பற்றி ஆய்ந்து, ஆராய்ந்து, விபரத்தோடு "The untold story" என்ற தலைப்பில் இருபது பக்க அளவில் கட்டுரை ஒன்றை எழுதியுள்ளது.

அதில்கடந்தஇரண்டரை ஆண்டு காலமாக நடைபெற்றுவந்த புரட்சித் தலைவரின் ஆட்சியைக் கலைத்ததற்கு போதுமான காரணம் மத்திய அரசால் தெரிவிக்கப் படவில்லை. கலைப்பதற்கான முறைகேடுகள் ஏதாவது நடந்துள்ளதா என்பதுபற்றும் தெரிவிக்கப்படவில்லை. புரட்சித்தலைவர் ஆட்சியில் தவறு என்ன நடந்திருக்கிறது என்று சுட்டிக்காட்டப்படவுமில்லை என தெளிவாகக் குறிப்பிட்டிருக்கிறது.!

மேற்கொண்டும், கருணாநிதி ஆட்சியைக் கலைத்ததற்கான ஆதாரங்களை சுட்டிக்காட்டி-கருணாநிதியை டிஸ்மிஸ் செய்வதற்கு முன் அவர்மீதான குற்றச்சாட்டு நாடாளுமன்றத்தில், விவாதிக்கப்பட்டதை அந்த ஏடு எடுத்து விளக்கியுள்ளது.

இப்படி ஊழல் குற்றச்சாட்டு சாட்டப்பட்டு, விசாரணை வைத்து, அதன்பின் பார்லிமெண்ட்ஜனாதிபதி என்று போய் அதன் பின்னர் திமுக அரசை கலைத்தார்கள் என்று கூறியுள்ள அந்த- ஏடு அனைந்திந்திய அண்ணா திமுக அரசு கலைக்கப்பட்டதற்கு தகுந்த காரணம் ஏதும் கூறப்படவில்லை என்று தெரிவித்துள்ளது

புரட்சித்தலைவர் ஆட்சியில் முதல்வர் தவறு பண்ணினாரா? இல்லை அமைச்சர்கள் தவறு செய்தார்களா, இல்லை சட்டமன்ற உறுப்பினர்கள் தவறினார்களா? என தெரிவிக்க வேண்டும் எனவும் அது கேட்டுக் கொண்டுள்ளது.

ஒரு சாதாரண பணியாளனை நீக்க வேண்டும் என்றாலே நோட்டீஸ் கொடுக்க வேண்டிய இந்தக் காலத்தில் ஐந்து கோடி மக்களின் நம்பிக்கையைப் பெற்று ஆட்சிப் பொறுப் பேற்றுள்ள ஒரு மக்கள் ஆசை டிஸ்மிஸ் செய்யும்முன் வாய்ப்பு கொடுத்து இருக்கக்கூடாதா என்று அந்த ஏடு கண்டனம் தெரிவித்துள்ளது.

மேலும் அவவேடு இதனால் புரட்சித்தலைவருக்கு தான் சாதகம் அவா மூன்றில் இரண்டு பங்கு தனி மெஜாரிட்டியுடன் வெற்றி பெறுவார்என்றும் தெரிவித்துள்ளது.

## நாஞ்சிலார் நிலைதடுமாறுகிறார்

வரும் ஜூன் முதல் வாரத்தில்எந்த கோட்டையிலிருந்து சதியால் அநியாயத்தால், அக்கிரமத்தால் புரட்சித்தலைவர் நீக்கப்பட்டாரோ அந்தக் கோட்டையை திறந்துமுதல்வர் பதவியில் அவர் நிச்சயம் அமர்வார் என்றும் அந்த ஏடு தெரிவித்துள்ளது.

ஆனால் நாஞ்சிலார் அவர்கள் ஆட்சி டிஸ்மிஸ் செய்யப்படும்போது அனைத்திந்திய அண்ணாதி.மு.க.உடன்பிறப்பினர், பத்திரிகை நிருபர்கள் அவரைச் சந்தித்து கேட்டபோது, அவர் என்ன சொன்னார்? "இது ஜனநாயகத்துக்கு முரண்பாடானது" "நான் இதை எதிர்பார்க்கவில்லை" என்று சொன்னார்.

இது "இந்து" ஆங்கில இதழில் அவரது பேட்டியாக வெளி வந்துள்ளது.

இன்றைக்கு அவர் அணி மாறியுள்ளார்.

ஆனால் நாஞ்சிலார் அவர்களே, உங்களைக்கேட்கிறேன். நீங்கள் இன்று அணி மாறி விட்டீர்கள், வாஸ்தவம். அதேசமயம் உளம்மாறி இந்த அநியாயத்தை ஆதரிக்கிறீர்களா?

நீங்கள் யாருக்கு இன்று வாதாடப் போகிறீர்கள்? கருணாநிதிக்கு ஆதரவாக வாதாடப்போகிறீர்களா?

மனச் சாட்சியுடன் சொல்லுங்கள் தேர்தல்கள் வரும் போகும், பதவியும் வரும் போகும்.

ஆனல் நெறி போகலாமா? பதவிக்காகப்பண்பு மாறலாமா? இடம்மாறினாலும் கொள்கை மாறலாமா?

உங்களுடன் நன்கு பழகியவன் என்ற முறையில் கேட்கிறேன். நாஞ்சிலார் அவர்களே நீங்கள் சேரக்கூடாத இடத்தில் சேர்ந்திருக்கிறீர்கள்.

## கருணாநிதியின் கொலை வெறி

இதே கருணாநிதி- நாஞ்சிலார் அவர்களை, உங்களை பல்வேறு சமயங்களில் தீர்த்துக் கட்ட- அரசியலில் இருந்து தூக்கி எறிய முயலவில்லையா?

1973ம் ஆண்டு நவம்பர் 13ம் நாள் அனைத்திந்திய அண்ணா திமுகவில் நீங்கள் இணைந்தபோது இதே மயிலைப்பகுதியிலே உங்கள் உயிருக்கு குறி வைக்கவில்லையா?

ஏன் ... மீனம்பாக்கம் விமானநிலையத்தில் கருணாநிதி கட்சிக்காலிகள் உங்கள் சட்டையை கிழிக்கவில்லையா? நீங்களே 'நான் ஒரு இதய நோயாளி; எனக்கு பாதுகாப்பு வேண்டும்' என்று நாடாளுமன்றத்தில் கேட்கவில்லையா?

ஓட்டேரியில் நீங்களும், நானும் பேசும்போது கலவரம் விளைவிக்கவில்லையா இந்தக் கருணாநிதிக்கட்சி


(1-ம் பக்கம் பார்க்க)


அர்ஸ் காங்கிரஸ்

அரிசன பிரிவு அறிக்கை

## கழக கூட்டணிக்கு ஆதரவு

சென்னை மே 7-புரட்சித் தலைவர் தலைமையில் இயங்கும் முற்போக்குக் கூட்டணி வேட்பாளர்களுக்கே வாக்களிக்க வேண்டும் என்று தமிழ்நாடு அர்ஸ் காங்கிரஸ் அரிசனப் பிரிவு தலைவர் கவிஞா பரமானந்தம் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

ஜனநாயகம் தழைக்க, விலைவாசியைக் குறைக்க, தாழ்த்தப்பட்ட- பிற்பட்ட மக்கள் நல்வாழ்வு பெற அரிசனப் பெருமக்கள் இந்த அணிக்கே வாக்களிக்க வேண்டும் என்று கவிஞர் பரமானந்தம் வேண்டுகோள் விடுத்துள்ளார்.



# ஏழரைநாட்டுச் சனியன் கருணாநிதி ஆட்சியின் ஏமாற்றங்கள் தொடர இனியும் அனுமதியோம்!